91/1



உ

தமிழ் நாடு இந்து ஆலய
அறநிலையத் தர்மகர்த்தர்கள்
சங்கம்

# இரண்டாவது மகாநாடு
# நிகழ்ச்சி.




இடம்: கும்பகோணம்
ஸ்ரீ ஆதிகும்பேஸ்வரஸ்வாமி
கல்யாண மண்டபம்.

1959 ஜூன் 13, 14.

உ

# இரண்டாவது
# தமிழ்நாடு இந்து ஆலய, அறநிலையத்
# தர்மகர்த்தர்கள் மகாநாடு.

—:o:—

தமிழ்நாடு இந்து ஆலய, அறநிலையத் தர்மகர்த்தர்கள் இரண்டாவது மகாநாடு குடந்தை ஸ்ரீ ஆதிகும்பேசுவரசுவாமி ஆலய திருக்கலியாண மண்டபத்தில் 1959 ஜூன் 13, 14 தேதிகளில் கூடியது. திருவாரூர் ஸ்ரீ தியாகராஜசுவாமி தேவஸ்தானத்தின் அறங்காவலர் திரு. V. S. தியாகராஜ முதலியார் அவர்கள் தலைமைவகித்தார்.

அறநிலைய அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் கோபுரவாயிலில் ஆலய மரியாதைகளுடனும் மேளதாளத்துடனும் வரவேற்கப்பட்டார். பூர்ணகும்ப வரவேற்பு வேத கோஷத்துடன் சிறப்புற நடந்தது. மகாநாட்டுப் பந்தலில் தேவாரம், பிரபந்தம் இசையுடன் ஓதினர்.

## வரவேற்புரை

வரவேற்புக் குழுத் தலைவரும், மன்னார்குடி ஸ்ரீ ராஜ கோபால சுவாமி, சுவாமிமலை ஸ்ரீ சுவாமிநாத சுவாமி ஆலயங்களின் தர்மகர்த்தருமான திரு. டி. எஸ். சுவாமிநாத உடையார் அவர்கள், எம். எல். ஏ. அமைச்சரையும், தலைவரையும் வரவேற்று நல்லுரை வழங்கினார். தமிழ்நாட்டு ஆலயங்களின் பழம் பெருமை நன்கு விளங்கவும் அறம் சிறக்கவும் அமைச்சர் ஆற்றிவரும் தொண்டைப் பெரிதும் பாராட்டி "தமிழ் நாட்டுப் பண்பாட்டுக்கு ஊறு விளைக்கும் தொல்லைகளைப் பெருத்து வரும் இந்நாளில், பண்டைத் தமிழகச் சிறப்புகளும், திருப்பணிகளும் நன்கு நடக்கத் துணைபுரிந்து வரும் திரு. பக்தவத்சலத்தின் பக்தியும், சிரத்தையும் இணையற்றன. இத்துறை

யில் அமைச்சருடன் ஒத்துழைத்து, ஆலயங்கள் மீண்டும் மக்கள் வாழ்க்கையில் முக்கியமாகத் துலங்க வழிசெய்வது தர்மகர்த்தர்கள் கடமையாகும்" என்றார். மேலும் பேசுகையில், புது அறநிலைய மசோதாவின் ஷரத்துக்களைப் பற்றித் தர்மகர்த்தர்கள் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

திரு. தியாகராஜ முதலியாரைத் தலைமை வகிக்கும்படி கேட்டுக்கொண்டு திரு. சாமிநாத உடையார் பேசுகையில், திருவாரூரில் பெரிய திருப்பணி கைங்கரியத்தை எடுத்துச்செய்வதை தஞ்சை முழுதும் புகழ்கிறதென்று கூறினார். திரு தியாகராஜ முதலியார் நீண்ட நாளாகத் தர்மகர்த்தாவாக இருந்து அனுபவம் பெற்றவரென்பதைச் சுட்டிக்காட்டி மற்ற தர்மகர்த்தர்களுக்கு அவர் வழிகாட்ட வேண்டுமென்றார்.

திரு. எம். பக்தவத்சலம் மகாநாட்டைத் துவக்கிவைத்தார். அமைச்சரின் துவக்க உரைக்குப்பின்பு திருமழிசை ஸ்ரீ ஆழ்வார் ஜகந்நாத பெருமாள் ஆலய அறங்காவலர் திரு. டி.எஸ். வடிவேல் முதலியார் முன்மொழிய திரு. க.சோமசுந்தரம் வழிமொழிய திருவாரூர் ஸ்ரீ தியாகராஜசுவாமி ஆலய பரம்பரை உள்துறை நிர்வாகத் தர்மகர்த்தார் திரு வ. சோ. தியாகராஜ முதலியார் அவர்கள் தலைமை வகித்து விரிவுரையாற்றினார்.

பின்பு சங்கச்செயலாளர் மயிலை கபாலீச்சரம் தருமகர்த்தர் திரு. கு. அய்யா. சுப்பிரமணிய முதலியார் ஆண்டு அறிக்கையைச் சமர்ப்பித்தார்.

மகாநாடு சிறப்புற நடைபெறும்படி ஆசிகூறி வந்த வாழ்த்துச்செய்திகளைத் திரு. க. சோமசுந்தரம் வாசித்தார்.

## மலர் வெளியீடு

தமிழ்நாடு அறநிலையத் தர்மகர்த்தர்கள் சங்கச்சிறப்பு மலரை நாச்சியார்கோவில் தருமகர்த்தர் திரு. பி. ஆர். பொன்னுசாமி சேர்வை அமைச்சருக்கும், மகாநாட்டுத் தலைவருக்கும் அளித்து, மலர் வெளியிட்டு விழாவை நடத்தி வைத்தார்.

"கம்பன்" ஆசிரியர் திரு. க. சோமசுந்தரம் நன்றி கூற மகாநாட்டுக் காலை நிகழ்ச்சிகள் முடிவுற்றன.

---

# அறநிலைய அமைச்சர்

## படத்திறப்பு விழா

அறநிலைய அமைச்சர் திரு. எம். பக்தவத்சலத்தின் உருவப் படத்திறப்பு விழா முதல்நாள் மாலை மகாநாட்டில் முக்கிய நிகழ்ச்சியாக அமைந்தது.

படத்திறப்பு விழாவுக்கு ஸ்ரீ கும்பேசுவர ஸ்வாமி தேவ ஸ்தான தருமகர்த்தர் திரு. கோ. சுவாமிநாத செட்டியார் தலைமை வகித்தார்.

குடந்தை நகராட்சி மன்றத் தலைவரும், குடந்தை சாரங்க பாணி கோயில் தர்மகர்த்தருமான திரு. டி. எஸ். ராஜகோபால அய்யங்கார் படத்தைத் திறந்து வைத்து, அமைச்சர் மக்களின் உடல் பாதுகாப்பு, உணவளிப்பு, உளங்காப்பு இலாக்காக்களை ஒருங்கே வகித்துத் திறம்பட நிர்வாகத்தை நடத்திவருவதைப் பாராட்டினார்.

படத்திறப்பு விழாவை யொட்டி பொதுச் சொற்பொழிவு கள் நிகழ்ந்தன.

குடந்தைக் கீழ்கோட்டம் எனும் ஸ்ரீ நாகேச்வர சுவாமி கோவில் தர்மகர்த்தருள் ஒருவரான டாக்டர் எம். எஸ். பட்டம் மாள் ஆலயங்களைத் துப்புரவாக வைத்துக்கொள்ள வேண்டு மென்பதை மிகவும் முக்கியமாக வற்புறுத்தினார். ஒவ்வொரு ஆலயத்திற்கும் ஒவ்வொரு பெண்மணியைத் தர்மகர்த்தாவாக நியமித்தால், குடும்பத்தை நிர்வகிக்கும் பெண்களைப்போல ஆலயங்களைச் சுத்தமாக வைத்துக் கொள்வார்கள் என்றார். அர்ச்சகர்கள் ஆசாரத்துடன், நன்கு பயிற்சி பெற்றவர்களாக இருக்கவேண்டுவதை அவர் வலியுறுத்தினார்.

"சுதேசமித்திரன்" உதவி ஆசிரியர் திரு. எஸ். பாஷ்யம் (சாண்டில்யன்) ஆலயங்களில் முன்னோர்கள் ஏற்படுத்தியமுறை களையும், சம்பிரதாயங்களையும் பாதுகாப்பது தர்மகர்த்தர்கள் கடமை என்பதைச் சுட்டிக் காட்டினார். ஆலயங்களை அறநிலைய இலாகாவின் நேர் மேற்பார்வைக்குள் கொண்டு வருவதானது, ஆலயங்களை அரசாங்க உடமையாக்குவதற்கு ஒப்பாகும் என்று கூறினார். "ஆலயங்கள் அரசியலுக்குட்படாத நடுநிலை ஸ்தலங் களாக விளங்கவேண்டும். மக்கள் பக்தி செலுத்துவதற்கான ஸ்தலங்களாக மட்டுமே இருக்க வேண்டும்" என்றார் அவர்.

மயிலாப்பூர் ஸ்ரீ கபாலீசுவரர் கோவில் தருமகர்த்தர் திரு. அண்ணாமலை முதலியார் ஆகமசாஸ்திரங்களில் விதித்துள்ள படி. தீக்ஷை பெற்றவர்கள்தாம் கோவில்களில் பூசைசெய்ய வேண்டுமென்ற விதி செய்வது அவசியமென்றார்.

முன்னாள் குடந்தை தருமகர்த்தர் திரு. சுப்ரமணியம் பழைய ஆகம நூல்களின் சுத்தமான பதிப்புகளை அறநிலைய இலாகாவே அச்சிட்டு வழங்கவேண்டும் என்றார். ஆலய ஊழி யர்களின் ஊதியங்களை உயர்த்தவேண்டும். அப்போதுதான் அவர்கள் நல்ல முறையில் நடக்க வழி ஏற்படும் என்றார்.

திரு. அய்யா. சுப்பிரமணிய முதலியார் நன்றிகூற மாலை நிகழ்ச்சிகள் முடிவடைந்தன.

## கூட்டுவழிபாடு

தருமகர்த்தர்கள் ஸ்ரீகும்பேசுவரஸ்வாமி கோவில், ஸ்ரீநாகேச் வரசுவாமி கோவில், ஸ்ரீ ராமசாமி கோவில், ஸ்ரீ சாரங்க பாணி சந்நிதி ஆகியவற்றில் கூட்டு வழிபாடு செய்தனர்.

## ஜூன் 14உ நிகழ்ச்சிகள்

தமிழ்நாடு இந்து ஆலய அறநிலையத் தர்மகர்த்தர்கள் இரண் டாவது மகாநாட்டின் இரண்டாம் நாள் நிகழ்ச்சி கலியாண மண் டபத்தில் 14—6—59 ஞாயிற்றுக்கிழமை காலையில் வரவேற்புக் குழுத் தலைவர் திரு. சுவாமிநாத உடையார் எம். எல். ஏ. தலை மையில் நடந்தது.

தர்மகர்த்தர்கள் சங்கத்தின் பேரவைக் கூட்டத்தில் மகாநாட் டுத் தீர்மானங்கள் உருவாக்கப்பட்டன. அறநிலைய மசோதா வின் முக்கியமான ஷரத்துக்களைப்பற்றித் தர்மகர்த்தர்கள் விரி வாக விவாதித்தனர்.

சங்கப் பேரவை சிபாரிசுசெய்த தீர்மானங்கள் மாலையில் ஸ்ரீ கும்பேசுவரசுவாமி தேவஸ்தான தர்மகர்த்தர் திரு. சுவாமி நாத செட்டியார் தலைமையில் நடந்த மகாநாட்டில் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டன. தீர்மானங்களைஅரசாங்கத்துக்குஅனுப்பக் காரியதரிசிக்கு அதிகாரம் வழங்கப்பட்டது.

பின்பு "கலைமகள்" ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன் தொன்றுதொட்டு வந்த ஆலயவழி பாட்டுச் சிறப்புகளைப்பற்றி விரிவாகவும், தக்க மேற்கோள்களுடனும் எடுத்துரைத்தார். தொல்காப்பியம், அகநானூறு, புறநானூறு, முதலிய சங்க இலக்கியங்களில் எல்லாம் ஆலயங்களில் மக்கள் வழிபட்டதை

எடுத்துக் கூறியிருக்க, ஆலயங்கள் தமிழ்நாட்டில் புதிதாக வந்த தென்று பிரசாரம் செய்வது எவ்வளவு தவறு என்பதை அவர் எடுத்துக் காட்டினார்.

அவர் மேலும் பேசுகையில் "திருவிழாக்கள் தமிழ்நாட்டுக் குப் புதிதல்ல. சங்க கால இலக்கியங்களில் அதற்குச்சான்றுகள் உள்ளன. பெருவிழாவில் ஏழாம்நாள் தீர்த்தவாரி நடக்கும் செய்திகள் இலக்கியத்தில் காண்கின்றன. "கழுநீர் எழுநாள்" எனக்கூறும் இலக்கியம்" என்றார்.

"மன்னர்கள் வளர்த்து வந்த ஆலயவழிபாட்டுப் பண்பை அறங்காவலர்கள் காக்க முற்படவேண்டும். அரசாங்கம் சமயச் சார்பற்றதென்றாலும் ஆலயங்களில் மிகுதியான கவனம்செலுத் துகின்றன. அருள்வழியை நிலைநாட்டத் தோன்றிய அறநிலை யங்களைச் சமூகத்தொண்டு வழிக்குத் திருப்பப் பார்க்கிறார்கள். அதற்கென்று ஏற்பட்டதை அதற்கே பயன்படுத்துவதுதான் நல்லது. தமிழ் இலக்கியங்களை வெளியிடுவதிலும் அறங்காவ லர்கள் கவனம் செலுத்தவேண்டும். கடவுள் வணக்கமில்லாத இலக்கியம் இல்லை. நல்ல இலக்கியங்கள் சொற்கோயில்களா கும். ஆலய வழிபாட்டுக்கு உறுதுணையாக இந்நூல்கள் விளங்கும்.

"அன்பும், அருளும், அருள்வழிப் பொருளும் சிறந்த அறம் தமிழ் நாட்டில் ஒன்றில்தான் உண்டு. உலகெலாம் ஒன்று என்ற உலக சகோதரத்துவத்தை நினைப்பூட்டிய ஆன்றோர்கள் வாழ்ந்த நாடு நம்நாடு. அன்று மட்டுமல்ல; இன்றும் மகாத்மா காந்தி போன்றோர் அன்பு நெறி காட்டி உலகுக்கு வழிகாட்டி யதை நாமறிவோம்.

"மனித சகோதர உணர்ச்சியை ஊட்டவல்லது அறநிலையங் களேயாகும். அறமும், அன்பும் நிறைந்த தலங்களின் தூய்மை யைக் காத்தல்வேண்டும். அன்று அறங்காத்த மன்னர்களைப் போல, இன்று அறங்காவலர்களாக அமர்ந்துள்ள பெருமக்கள் தொன்றுதொட்டு வந்த ஆலயப் பண்பு, பணிகளைக் காத்து வரு வார்களாக" என்று கூறி நல்லுரையை முடித்தார்.

திரு. சுவாமிநாத செட்டியார் முடிவுரை வழங்கினார்.

மயிலை ஸ்ரீ கபாலீசுவரர் ஆலய தர்மகர்த்தாவும், சங்கச் செயலாளருமான திரு. கு. அய்யா. சுப்பிரமணிய முதலியார் மகாநாட்டில் கலந்துகொண்ட எல்லோருக்கும் நன்றி கூறினார். நன்கொடை அளித்தும், வாழ்த்துரை அனுப்பியும், ஆசி வழங் கியும் ஆதரித்த தருமபுர ஆதீனத்தார், ஸ்ரீமுகம் அனுப்பி ஆசிகூறிய ஸ்ரீசிருங்கேரி சங்கராச்சார்ய சுவாமிகள், குன்றக்குடி

அடிகளார் நன்கொடையாளர்கள் மற்றும் மகாநாடு சிறப்பாக நடைபெறுவதற்கு உதவிய டிபுடி கமிஷனர், உதவிக்கமிஷனர், ஸ்ரீ ஆதி கும்பேசுவரசுவாமி ஆலய நிர்வாக அதிகாரி திரு. வேங்கடாசலம் பிள்ளை, ஸ்ரீ பூவனூர் தருமகர்த்தா திரு. சுப்பய்யா முதலியார் முதலியவர்களுக்கும், தமிழ்நாட்டு அறங்காவலர்கள் மகாநாட்டில் கலந்துகொள்ளச் சகல சௌகரியங்களையும்செய்து கொடுத்த மன்னார்குடி திரு. டி. எஸ். சுவாமிநாத உடையார் எம்.எல்.ஏ., அன்னார் சகோதரர்கள் மன்னார்குடி நகராட்சி மன்றத்தலைவர் திரு. டி. பி. சிங்காரவேலு உடையார், பூவனூர் சிவாலய தர்மகர்த்தர் திரு. டி. பி. அய்யாதுரை உடையார், ஆகியவர்களுக்கும் ஆலயங்களுக்கு அழைத்துச்சென்று உதவிய ஸ்ரீ நாகேசுவரசுவாமி ஆலய தர்மகர்த்தர் திரு. நாராயணசாமி அய்யர், அறங்காவலர்களும், வெளியூர் வாசிகளும் சௌகரியமாகத் தங்குவதற்கு தமது பங்களாவை உதவிய கபிஸ்தலம் திரு. ஆர். சௌந்தரராஜ மூப்பனார், சுவாமிமலையிலிருந்து வந்து இனிய தேவாரம், திருப்புகழ் இசைத்த ஓதுவார்கள், ஆகியவர்களுக்கும், கோவில் உள்துறையினர், மற்றும் பெயர் தெரியாமல் உதவியவர்கள் அனைவருக்கும் திரு. முதலியார் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொண்டார்.

ஓதுவார்களின் மங்கல கீதங்களுடன் இரண்டு நாள் மகாநாடும் இனிது முடிந்தது.

---

# அமைச்சர் அறிவுரை

## (எம். பக்தவத்சலம்)

ஆலயங்களில் பெரும் பொருப்பு வகித்து வரும் தர்மகர்த்தர்களின் அபிப்பிராயங்களைத் தெரிந்துகொள்ள அரசாங்கம் ஆவலாக இருக்கிறது. எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டுமென்பது பழங்காலத்தில் நமது முன்னோர் வகுத்த வழி. அவ்வழி நிற்க ஆலயங்களைக் காப்பது தர்மகர்த்தர்களின் கடமை. தர்மகர்த்தர் எனில் வெறும் பதவி அல்ல. சான்றோர் காட்டிய வழி நிற்கும் வகையில் ஆலயங்களின் நிர்வாகத்தை நடத்தும் பெரும் பொறுப்பை வகிப்பவர் தர்மகர்த்தர். ஆகவே, தர்மகர்த்தர்களாக இருப்பவர்கள் ஆலயங்களைச் சீரிய வகையில் நடத்த வழி காண்பதை நோக்கமாகக் கொண்டவர்களாக இருக்க வேண்டும்.

மக்கள் ஆலயங்கள் இவ்வாறுதான் நடக்கவேண்டுமென்ற கருத்துள்ளவர்களாக இருக்கிருர்கள். பல ஆலயங்களில் தர்ம கர்த்தர்கள் நல்ல முறையில் வேலைசெய்து வருவதைக் கண்டிருக்கிறேன். அவர்கள் திரட்டப்பட்ட கருத்துகள், அநுபவங்கள் இவைகளின் பிரதிநிதிகளாக அப்பதவியில் அமர்ந்திருப்பவர்கள். அவர்கள் மக்கள் நலனைக் கருதி அவ்வாறு நடந்து வருவது பாராட்டத் தக்கது.

சில தேவஸ்தானங்களில் தர்மகர்த்தர்கள் ஆலயங்களுக்கே வராமல் இருந்து விடுவதுண்டு. அப்பதவி கிடைக்கும் வரையில் அதே முயற்சியாக இருக்கிருர்கள். தர்மகர்த்தாவாக வர வேண்டு மென்று பாடுபடுகிருர்கள். பதவி கிடைத்தவுடன் அக்கறை இருப்பதில்லை. கோவிலுக்குக்கூட வராமல், நிர்வாகத்தை நடத்தும் தர்மகர்த்தருக்கு பொறுப்பு எப்படி இருக்க முடியும்? பதவியைவிடப் பொறுப்பு அதிகமாக இருக்கவேண்டு மென்பதைக் காட்டவே இதைச்சுட்டிக் காட்டினேன்.

## வருமானத்தை அதிகரிக்க வழி

சில தேவஸ்தானங்களில் வருமானத்தில் செலவுபோக மிச்சப்படுகிறது உண்மைதான். ஆயினும் அத்தகைய தேவஸ்தானங்களிலேயே செய்யவேண்டியவை எத்தனையோ இருக்கின்றன. அதை யெல்லாம் முடித்தபின் மிச்ச மிருந்தால் தான் பிறருக்கு உதவமுடியும்.

சமுதாய நலப்பகுதிகளில் கிராமத்தில் வேலைகளை நடத்துவதற்கு மக்களின் உதவியைக் கோருவதற்கு, கிராமக் கோயில்களுக்குப் பிரிவுபோட்டுக் கொண்டு செலவிடுவதை உதாரணமாகச் சொல்வதுண்டு. இப்போது மக்கள் இதை உதாரணமாகக்கொண்டு, தத்தம் ஊர்களிலுள்ள கோவில் திருப்பணிகள், திருவிழாக்களுக்கு அரசாங்கத்திடம் உதவி கோரத்தொடங்கியிருக்கிருர்கள். எல்லா வேலைகளையும் அரசாங்கம் ஏற்றுக் கொள்ள முடியாது. பாடல் பெற்ற கோயில்கள், முக்கிய திருத்தலங்கள் ஆகியவற்றின் திருப்பணியை மட்டுமே அரசாங்கம் ஏற்கமுடியும்.

கோயில் திருப்பணிகள் நன்கு நடக்கவேண்டுமெனில் வருமானத்தை அதிகப்படுத்துவது முக்கியம். இவ்விஷயத்தில் இம்மகாநாடு கவனம் செலுத்துமென்று நம்புகிறேன். நாட்டில் பக்தி நாளுக்குநாள் அதிகரித்துக் கொண்டு வருகிறது. ஆலயங்களுக்கு உதவவேண்டுமென்ற எண்ணமும் வளர்ந்துள்ளது.

மக்களின் மனோநிலையை உணர்ந்து, அவர்களுக்கு அதிக வசதிகள் செய்து கொடுத்தால், வருமானம் தானாகவே பெருகும்.

திருப்பதியை உதாரணமாகச் சொல்லலாம். பத்து ஆண்டுகளுக்கு முன் திருவேங்கடமுடையான் ஆலயத்தின் வருமானம் ரூ. 15 லட்சமாக இருந்தது. இப்போது ரூ. 75 லட்சமாகி இருக்கிறது. யாத்திரிகர்களுக்கு நிறைய வசதிகள் செய்தால் வருமானம் பெருகுமென்பதில் சந்தேகமேயில்லை. தர்மகர்த்தர்கள் ஆக்க வகையில் கவனம் செலுத்தி, வருமானத்தை அதிகப்படுத்த வழிதேடவேண்டும். ஆலய நிர்வாகம் சீராக நடந்து வருமானால் வருமானம் அதிகரிக்கும்.

ஆலயங்களில் இருந்து வரும் பரம்பரைப் பழக்கம், முறைகளைப் பின்பற்றி நடப்பதுதான் நல்லது. நமது முன்னோர்கள் வைத்த தனம் ஆலயங்கள். அவற்றுக்கு வரும் பக்தர்களுக்கு நிறைய வசதிகள்செய்து தரவேண்டும். முன்னால் செலவிட்டால் தான் வருமானம் கிடைக்குமென்பது வர்த்தகமுறை. அதேபோல ஆலயங்களை நாடிவரும் யாத்திரிகர்களுக்கு வசதிசெய்வதற்காகச்செலவிட்டால் வருமானம் அதிகரிக்கும். மக்கள் மனஅமைதியை நாடியே ஆலயங்களுக்கு வருகிறார்கள். அவர்கள் திருப்தியடையும் வகையில் சௌகரியங்களைச் செய்து கொடுக்க வேண்டும். தருமகர்த்தர்கள் இம்மாதிரி திட்டங்களில் கவனம் செலுத்த வேண்டுமென்பதற்காகவே இதைச் சொல்கிறேன்.

## ஆலய நிர்வாகம் தர்மகர்த்தரின் பொறுப்பே

ஆலய நிர்வாகத்தில் தர்மகர்த்தர்களின் மேற்பார்வை கண்டிப்பாக இருக்கவேண்டும். தர்மகர்த்தர்கள் அதிகாரிகளல்லாத முறையில் தான் ஆலயப்பொறுப்பை ஏற்றுக்கொள்கிறார்கள். அவர்களுக்கு சொந்த ஜோலிகள் பல இருக்கலாம். அதனால் அவர்களுக்கு ஆலய நிர்வாகத்தில் அதிகத்தொல்லைகள் வைப்பது சரியல்ல. ஆலயங்களில் நிர்வாகம் சீராக நடப்பதற்கு வழி செய்யவேண்டும். இவ்வேலையைத் தான் நிர்வாக அதிகாரிகள் ஏற்றுக் கொள்கிறார்கள். தர்மகர்த்தர்களும், அதிகாரிகளும் தத்தம் வேலையைக் கவனித்து நிர்வாகம் ஒழுங்காக நடப்பதற்கு வழி தேடவேண்டும்.

## நிலங்களுக்கான கூட்டுச்சாகுபடி முறை

நிலங்களில் வருமானத்தை அதிகரிப்பது எப்படி என்பதில் கவனம் செலுத்தவேண்டும். எந்த முறையில் சாகுபடிசெய்தால்

வருமானம் அதிகரிக்கும்! முன்னால் நேராகக் குத்தகைக்கு விடும் முறை இருந்து வந்தது. அதையடுத்து ஏலம் வைத்து குத்த கைக்கு விடும் முறை ஏற்பட்டது. இதனால் ஏலமெடுப்பவர்கள் உள்குத்தகைக்கு விடும் பழக்கம் ஏற்பட்டது. நியாயவாரச் சட்டம் வந்த பிறகு, நிலக்காரருக்கு கிடைக்கவேண்டிய வாரம் நூற்றுக்கு நாற்பது பங்குக்கும் குறைந்தது. ஆலயங்களுக்கு 40 சத விகிதவாரம் குறையாமல் வரச்செய்வது முக்கியம். நடு வாந்தர மனிதனை அகற்றினால்தான் தேவஸ்தானங்களுக்கு அதன் நிலங்களிலிருந்து நாற்பது பங்கு வாரம் சரிவரக்கிடைக்க முடியும்.

நிலங்களை நேராகக் குடியானவர்களுக்கு விடலாம். அதிலும் கஷ்ட நஷ்டங்கள் ஏற்படக்கூடும். சாகுபடியை முற்போக் கான ரீதியில் நடத்துவதற்கு அவர்களுக்குப் போதிய வசதிகள் இருக்காது. கூட்டுறவு விவசாய முறையை ஏற்படுத்தினால் சங்கடத்தை அகற்றலாம். உற்பத்தியைப் பெருக்குவது நமது நோக்கம். இதன் மூலம் குடியானவர்களுக்கும், தேவஸ்தானங் களுக்கும் நிலத்திலிருந்து அதிக வருவாய் கிடைக்கும். சாகு படியாளர் கூட்டுறவுகளை அமைத்து, தேவஸ்தானங்கள் நல்ல முறையில் விவசாயம் நடத்தி, வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள வழி உண்டு.

## புது அறநிலைய மசோதா

புது அறநிலையப் பாதுகாப்பு மசோதாவைப்பற்றி திரு. உடையார் குறிப்பிட்டார். அது செப்டம்பர் மாதத்தில் சட்ட மாகி விடுமென்று எதிர்பார்க்கிறேன். இப்போது இருசட்ட சபைகளின் கூட்டுத்தனிக்கமிட்டி மசோதாவைப் பரிசீலித்து வருகிறது. 25—6—59 க்குள் தர்மகர்த்தாக்கள் தங்கள் கருத் துக்களைத் தெரிவித்துக்கொள்ளலாம். அவர்கள் கருத்துக்கள் கவனிக்கப்படும்.

கோவில்களை அரசாங்க உடைமையாக்கி விடுகிறார்களென்று பிரசாரம் செய்கிறார்கள். பெரிய வார்த்தைகளைப் போட்டு மிரட்டுகிறார்கள். இவ்வார்த்தைகள் உடனே பிடித்துக்கொள் கின்றன. நான் பல தடவை விளக்கியும் இதேபோலப் பேசுவது தான் விந்தையாக இருக்கிறது.

அறநிலையங்களை அரசாங்க இலாகாவாக நடத்துவதுதான் நல்லதென்று அனுபவசாலியான திரு. ஆர். வி. கிருஷ்ணய்யரும், மைசூரில் முன்னாள் ஹைகோர்ட்டு நீதிபதியாக இருந்த ஸ்ரீவேங் கடரமணராவும்,பின்னர்ச் சட்டசபைக்கமிட்டியும்,ஹைகோர்ட்

டும் அபிப்பிராயம் தெரிவித்துள்ளனர். அவர்களுடைய கருத்துக்கு மதிப்புக்கொடுத்து இலாகாவே மேற்பார்வை செலுத்துவதென முடிவு செய்தோம்.

தேவஸ்தான வருமானத்தை அரசாங்கப் பொதுப்பணத்தில் சேர்ப்பதைச் சிலர் ஆட்சேபிக்கிறார்கள். அரசாங்க வரவு செலவு முறையைப்பற்றி அறிந்தவர்கள் ஆட்சேபிப்பதற்கு ஒன்றுமில்லை. பொதுநிதியில் பணத்தைச் சேர்ப்பதும், அதைத்தனிக் கணக்கில் கட்டி வைப்பதும், மற்ற செலவுகளுக்கு எடுத்துக் கொண்டாலும் கூட மீண்டும் ஈடு செய்வதும் அரசாங்கத்தில் பழக்கத்தில் இருந்து வரும் முறையாகும். எனவே, தேவஸ்தான நிதியிலிருந்து சர்க்கார் ஒரு நயா பைசாகூட எடுத்துக் கொள்வதில்லை. இதைப் பலமுறை எடுத்துரைத்தும் மீண்டும் மீண்டும் தப்புப்பிரசாரம் செய்கிறார்கள்.

## முதல் மகாநாட்டின் நிர்மானங்கள்

சென்ற ஆண்டில் முதல் மகாநாட்டில் தெரிவித்த யோசனைகள் ஏற்கப்பட்டுள்ளன. தேவாலயங்களுக்கேற்ற ஓவியக்கலை, இலக்கியங்கள் வளர்ச்சியில் கவனம் செலுத்துவது வரவேற்கத்தக்கது. ஏழைக்குழந்தைகளுக்குப் பகலுணவு அளித்து, தேவாரம்போன்ற பாசுரங்களைக் கற்றுக்கொடுக்க வேண்டும். அப்போதுதான் குழந்தைகளுக்கு ஆலயங்களில் பற்றும், பக்தியும் வளரும்.

அமைச்சர் முடிவாகப் பேசுகையில் ஆலயக்கட்டுப்பாடுகளுக்குட்பட்டு அந்நியரை கோவில்களுக்குள் அனுமதிக்க வேண்டுமென்பதை முக்கியமாக வற்புறுத்தினர்.

[குறிப்பு:— 13—5—1959 அன்று குடந்தை கும்பேசுவர சுவாமி ஆலயத்தில் தமிழ்நாடு தர்மகர்த்தர்களின் 2-வது மகா நாட்டைத் துவக்கிவைத்து ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம்.]

---

# தலைமை உரை

## திரு. வ. சோ. தியாகராஜ முதலியார்

புது அறநிலையப் பாதுகாப்பு மசோதா தர்மகர்த்தர்களுக்கு நல்லதா, அல்லவா என்பது வேறு விஷயம். தேவாலய நிர்வாகத்தில் அரசாங்கம் மேற்பார்வை செலுத்துவது நல்லது என்பதை ஓரளவு ஒப்புக்கொள்கிறோம். சர்க்கார் மேற்பார்வையில் அறநிலையங்கள் வந்த பின்பு மக்களுக்குக் கோவில்களில் நம்பிக்கை வளரும் வகையில் நிர்வாகம் சீர்பட்டுள்ளது எனக்கருதுகிறேன். தேவாலய கண்காணிப்பு அறநிலைய அமைச்சர் தலைமையில் நல்ல முறையில் நடந்து வருகிறது.

இந்து மதம் பழம் பெருமை வாய்ந்தது. மக்களுக்கு நம்பிக்கை பெருகும் விதத்தில், கோவில் வருமானத்தில் மிச்சப் படும் பணத்தைச் செலவிட்டு, மக்களுக்குப் பயன்படச் செய்ய வேண்டும்.

கிறிஸ்தவ மதஸ்தாபனங்கள் கல்விக்கும், சிகிச்சைக்கும் பணத்தைச் செலவிட்டு, மக்களுக்கு மதப்பற்று குன்றாமல் காத்துவருகின்றன. நமது ஆலயங்களும் அவ்வாறு செய்தால் மக்களுக்குப் பக்தியும் நம்பிக்கையும் வலுக்குமெனக் கருதுகிறேன். கோவில் பணத்தை மக்களுக்கு நலம் புரிவதில் ஈடுபடுத்தினால், கோவில்கள் நன்றாக நடக்கும் என்பதில் சந்தேகமில்லை. நமது மதத்தை வளர்க்கவும், ஆலயங்கள் பழைய பெருமையுடன் விளங்கவும், பண்டைப் பண்புகள் சிறக்கவும், மக்களுக்கு மதத்தில் பற்றும், பக்தியும் ஓங்கவும் இது வழி செய்யும்.

நம்முடைய கலைச்செல்வததை அந்நிய மதத்தினர் நுகர்ந்து அனுபவிக்க வழிசெய்ய வேண்டுமென்று மந்திரி கூறியதை நான் ஒப்புக்கொள்கிறேன். அந்நியர் நமது கோவில்களுக்குள் வருவதற்கு உள்ள இடையூறுகளை அகற்றவேண்டும்.

கோவில்கள் அறநிலைய இலாகாவுக்குச் செலுத்தவேண்டிய தீர்வையை அதிகப்படுத்த வேண்டுமென்று புது அறநிலைய மசோதாவில் கூறியிருக்கிறது. இது 8 சத விகிதமாக்கவேண்டுமென மசோதாவில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அதை அதிக பட்சமாக வைத்துக்கொள்ளவேண்டும்,

மந்திரி திரு. பக்தவத்ஸலம் :—உண்மை. 8 சத விகிதம் அதிக பட்சம் என்று தான் வைத்திருக்கிறது.

திரு. தியாகராஜ முதலியார் தீர்வைப் பிரச்னையைப்பற்றி மேலும் பேசினர்.

## நிகர வருமானத்திற்கே தீர்வை கட்டணம்

ஆலய ஊழியர்களுக்குக் கால நிலையை உத்தேசித்து சம்பளங்களை உயர்த்த வேண்டியிருக்கிறது. ஆலய கைங்கரியங்களைச் செவ்வனே செய்வதற்கான ஊக்கத்தை அவர்களுக்கு உண்டாக்கவேண்டும். மேலும் கோவில் நிர்வாகம் சீராக நடைபெறுவதற்கான செலவுகளையும் செய்யவேண்டும். இச்செலவுகள் எல்லாம்போக எஞ்சி நிற்கும் உபரிவருமானத்திலிருந்து தீர்வையைக் கணக்கிட்டு வசூலிக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறோம். தீர்வை விகிதத்தைக் குறைக்கவேண்டுவதன் அவசியத்தை கவனிக்கவேண்டும்.

[குறிப்பு :— 13—6—1959 குடந்தை மகா நாட்டில் ஆற்றிய தலைமைப் பேருரையின் சாரம்.]

---

**14—6—1959ல் கும்பகோணத்தில் நடைபெற்ற**

**தமிழ்நாடு, இந்து ஆலய, அறநிலேயத் தர்மகர்த்தர்களின்**

# இரண்டாவது மகாநாட்டில்

# நிறைவேறிய தீர்மானங்களின்

## கருத்துரை.

1. சட்டசபையின் பரிசீலனையிலிருந்துவரும் இந்து ஆலய அறநிலேய மசோதாவைச் சர்க்கார் கொண்டுவந்திருக்கும் நோக்கத்தைப் பாராட்டினாலும், மசோதா பூரண திருப்தி தருவதாக இல்லை என்ற கருத்தை முதல் தீர்மானத்தின் மூலம் மகாநாடு தெரிவித்தது. தர்மகர்த்தர்களின் முக்கியத்துவத்தையும் அதிகாரங்களையும் குறைத்து இலாகா அதிகாரிகளுக்குக் கீழ்ப்பட்டவர்களாக அவர்களை ஆக்குவதாக மசோதாவின் ஷரத்துகள் அமைந்திருக்கின்றன என்றும் மகாநாடு கருதியது. மடங்களுக்கும் மற்ற ஆலய அறநிலேயங்களுக்கும் தனித்தனியாகச் சட்டம் செய்யவேண்டும் என்ற யோசனையையும் மகாநாடு வெளியிட்டது. மசோதாவில் பல சொற்களுக்குத் திட்டவட்டமாக விளக்கம் வரையறுக்கவேண்டும் என்றும் மகாநாடு கருதிற்று.

2. ஜைன ஆலய, அறநிலேயங்களுக்கும் சட்டம் நேரடியாக விஸ்தரிக்கப்படவேண்டும் என்றும் சமய அறநிலேயங்களைப் போலவே எல்லா அறநிலேயங்களும் சட்டத்தின் கட்டுக்கோப்பின்கீழ் கொண்டுவரப்படல்வேண்டும் என்றும் மகாநாடு கருத்துத்தெரிவித்தது.

3. ஆலய அறநிலேய நிர்வாகத்தை நேரிடையாகவோ, மறைமுகமாகவோ சர்க்கார் மேற்கொள்ள மசோதாமூலம் வழி செய்வது இந்திய அரசியல் சட்டத்தின் 25, 26 வது ஷரத்துக்களுக்கு விரோதமாகுமென்றும் சர்க்கார் பொது மேற்பார்வை செய்ய மாத்திரமே அதிகாரமுள்ளதென்றும், கமிஷனருக்கு எல்லா அதிகாரங்களையும் ஒப்படைப்பது தவறென்றும் மகாநாடு சுட்டிக்காட்டிற்று.

4. நீதிமன்றங்களை ஒதுக்கி கமிஷனருக்கே இந்து அறநிலையச் சட்டத்தின்கீழ் எல்லா அதிகாரங்களையும் கொடுக்க மசோதாமூலம் வழி செய்வதை மகாநாடு வன்மையாகக் கண்டித்தது. கமிஷனரோ சர்க்காரோ சட்ட நடவடிக்கைகளைத் தாமாகவே மசோதாவின் 112 வது பிரிவின் கீழ் மேற்கொள்வதையும் மகாநாடு கண்டித்து, இது அரசியல் சட்டத்துக்குப் புறம்பாகும் என்று எச்சரித்தது. கோர்ட்டில் இருக்கும் எந்த வழக்குகளையும் போதுமானதும் தக்கதுமான காரணங்களின்றி வாபஸ்பெற கமிஷனர் தர்மகர்த்தர்களை அனுமதிக்கக் கூடாதென்றும் மகாநாடு கருத்துத் தெரிவித்தது.

5. வருமான அடிப்படையில் ஆலயங்களையும் அறநிலையங்களையும் "டிபுடி கமிஷனர்" ஆதிக்கத்திலும் 'பிரதேச கமிட்டி' அதிகாரத்தின் கீழுமாகப் பிரிப்பதை மகாநாடு கண்டித்தது. எல்லாவகையான ஆலய, அறநிலையங்களும் பிரதேசகமிட்டியின் மேற்பார்வையின் கீழ் வைக்கப்படவேண்டும் என்றும், பிரதேச கமிட்டியில் தாலுகாக்களனைத்திற்கும், சம்பந்தப்பட்ட எல்லா நலவுரிமைகளுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்படவேண்டும் என்றும், உதவி கமிஷனர்களுக்கும் பிரதேச கமிட்டிகளுக்கும் உள்ள உறவு நகரசபைகளுக்கும் அவற்றின் கமிஷனர்களுக்கும் இடையே உள்ளதைபோல இருக்கவேண்டும் என்றும் பிரதேசகமிட்டி உறுப்பினர்களின் பதவிகாலம் 3 ஆண்டுகள் என்று மசோதாவில் இருப்பதை 5 ஆண்டுகளாக உயர்த்தவேண்டும் என்றும், பட்ஜெட்டை அங்கீகரிக்கும் அதிகாரமும் பிரதேச கமிட்டியிடமே இருக்கவேண்டும் என்றும் இடைக்கால உத்தரவு பிறப்பிக்கவுங்கூட உதவிகமிஷனருக்கு அதிகாரம் கூடாதென்றும் மகாநாடு கருதியது.

6. மசோதாவில் தர்மகர்த்தர்களின் பதவிகாலத்தை 3 ஆண்டுகளாகக் குறைத்திருப்பதைக் கண்டித்து, இப்போதுள்ளபடி 5 ஆண்டுகளாகவே இருந்து வரவேண்டும் என்று சர்க்காரை மகாநாடு கோரியது.

7. நீதிபரிபாலனத்தையும் நிர்வாகத்தையும் பிரித்து ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே ஒவ்வொரு துணைக்கமிஷனரை நியமிக்கவேண்டும் என்றும் பிரதேசவாரியாகத் துணைக்கமிஷனர்கள் தேவையில்லை என்றும் ஒரே துணைக்கமிஷனரிடம் நிர்வாகமும் நீதி பரிபாலனமும் சேர்ந்திருப்பது கூடாதென்றும் நிர்வாக துணை கமிஷனருக்கு 'டிபுடி கலெக்டர்' களையும் நீதி பரிபாலன துணை கமிஷனருக்கு உயர்தர 'சப்சட்ஜு' களையும் நியமிக்கவேண்டும் என்றும் மகாநாடு சர்க்காருக்கு யோசனை கூறிற்று.

கமிஷனர், துணைக்கமிஷனர் முன்னிலையில் நடக்கும் வழக்குகள் "சிவில் புரொஸிஜர் கோட்" நடைமுறைகளின் படித்தான் நடைபெறவேண்டும் என்றும் மகாநாடு இத்தீர் மானத்தில் வற்புறுத்திற்று.

8.. ஆலய,அறநிலையங்களின் நிர்வாக திட்டத்தை (Scheme) மாற்றியமைக்கவோ, திருத்தவோ சர்க்காரோ கமிஷனரோ தாமே நடவடிக்கை எடுத்துக்கொள்ளக் கூடாதென்றும், கோர்ட் அமைத்த திட்டங்களை மாற்றக் கூடாதென்றும், அமுலில் இருக் கும் திட்டங்களை மாற்றி யமைக்கும்போது தர்மகர்த்தர்களுக் கும் சம்பளம் பெறும் நிர்வாக அதிகாரிகளுக்குமுள்ள அதிகார வரம்புகள் வரையறுக்கப் படவேண்டும் என்றும், அன்றாட நிர்வாக சம்பந்தமான பொறுப்புக்களும் அதிகாரங்களும் தவிர மற்றெல்லாப்பொறுப்புகளும் அதிகாரங்களும் தர்மகர்த்தர்களுக் கே இருக்கவேண்டும் என்றும், சம்பள அதிகாரி அவர்கள் கீழ் வேலை பார்ப்பவராக இருக்கவேண்டும் என்றும் நிர்வாக தர்மகர்த் தரையோ, தர்மகர்த்தர்கள் போர்டு தலைவரையோ கமிஷனரோ உதவி கமிஷனரோ காலவரம்பின்றி நியமிக்கலாகாதென்றும், நிர்வாக அதிகாரிகள் சமயப்பற்றும் ஆசாரமும், சமயஞானமும் உடையவர்களாக இருக்கவேண்டும் என்றும் தர்மகர்த்தர்களின் சம்மதத்துடனேயே அவர்களை நியமிக்கவேண்டும் என்றும், அவர் கள் ஓர் அறநிலையத்தில் குறைந்தது 3 வருஷ காலத்துக்காவது தொடர்ந்து இருக்கவேண்டும் என்றும் தனித்தனியான 2 அற நிலையங்களுக்கு ஒரே அதிகாரியை நியமிக்கலாகாதென்றும், ரூ. 10,000 க்கு குறைந்த வருவாய் உடைய ஆலயங்களுக்கு நிர் வாக அதிகாரி தேவையில்லை என்றும், ஒவ்வொரு நிர்வாக அதி காரியும் தங்கள் கிரேடுக்குத் தக்கபடியான ஆலயத்துக்கே நிய மிக்கப்பெறவேண்டும் என்றும் மகாநாடு பல கருத்துக்களைத் தெரிவித்தது. புது தர்மகர்த்தர்களை நியமிக்கும் நோக்கத்துடன் திட்டத்தை மாற்றவோ, புகுத்தவோகூடாது என்றும் சர்க்காரை மகாநாடு கேட்டுக்கொண்டது.

9. சுப்ரீம் கோர்ட்டு விரோதமாக தீர்ப்புக்கூறியும் மசோ தாவில் 6 வது அத்தியாயம் இடம் பெற்றிருப்பதை மகா நாடு கண்டித்தது. அந்த அத்தியாயம் தேவையில்லை என்றும் தேவையான அதிகாரங்கள் யாவும் 116 (2) (B) (1) (11) பிரிவு களில் உள்ளன என்றும் சுட்டிக் காட்டிற்று.

10. மசோதா அறநிலையங்கள் செலுத்தும் கட்டணத்தை 5 சத விகிதத்திலிருந்து 8 சத வீதமாக உயர்த்துவதைக் கண் டித்து, அதை 30—9—1951 க்கு முன்னிருந்தபடி 3 சத வீத

மாகக் குறைக்கவேண்டும் என்று மகாநாடு கோரிற்று. நிர்வாக அதிகாரிகளின் பிராவிடெண்ட் பண்ட் நிதி, இலாகாவின் கமிட்டிகள், சஞ்சிகைகள் முதலிய எந்தச் செலவுக்கும் 3 சத விதமே போதுமானதென்றும், வசூலை தீவிரப்படுத்தவும் இலாகா நிர்வாகச் செலவுகளைக் குறைக்கவும் யோசனை கூறியும் ரூ. 500 க்கு உட்பட்ட அறநிலையங்களுக்கு கட்டணத்திலிருந்து விலக் களிக்கவேண்டும் என்றும் இத்தீர்மானம் வற்புறுத்துகிறது. மேலும் இலாகா மேற்பார்வையின் கீழ் புதிதாக வரும் நிலையங்களுக்கு நடைமுறை வருஷத்திலிருந்தே கட்டணம் விதிக்க வேண்டும் என்றும் முன் 3 பசலிகளுக்கும் சேர்த்து விதிக்கக் கூடாதென்றும், சந்தா செலுத்துவதற்காகத் தர்மகர்த்தர்களைத் தங்கள் சொந்தப் பணத்திலிருந்து செலுத்தத் தூண்டுவது கூடா தென்றும், இலாகா அதிகாரிகள் உண்டி திறப்பது, ஏலக்குத்தகை, திருவிழா மேற்பார்வைபோன்ற அறநிலையங்களின் செயல் களைக் கவனிக்க வருங்கால் அவர்களுக்குரிய பிரயாணப்படியை இலாகாவே தரவேண்டும் என்றும், ஒவ்வொரு அறக்கட்டளைக் கும் தனித்தனியே கட்டணம் வாங்கவேண்டும், ஒரே தர்மகர்த் தரின் நிர்வாகத்தில் இருக்கும் காரணத்துக்காக அவற்றை ஒரே கட்டளையாக நிர்ணயிக்கக் கூடாதென்றும் மகாநாடு இத்தீர் மானத்தில் வற்புறுத்திற்று.

*11.* அறநிலையங்களின் ஊழியர்களின் நலனுக்காக "பிரா விடெண்டு பண்டு" நிறுவவேண்டும் என மகாநாடு சர்க்காரைக் கேட்டுக்கொண்டது.

*12.* எந்த ஆலய, அறநிலயத்தின் உபரிநிதியையும் சமயச் சார்பற்ற செயல்களுக்கு உபயோகிக்கலாகாதென்று மகாநாடு தன் கருத்தைத் தெரிவித்தது.

*13.* மசோதா ஆலய, அறநிலயப் பொதுநல நிதியை நிறுவு தற்கு வழிசெய்வதை வரவேற்றும், இந்நிதியை ஆலய அறநிலையங்களுக்குத் தேவையான பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களைக் கற்றுக்கொடுக்கும் பாலிடெக்னிக்குகள் ஏற்படுத் தவும், வேத, ஆகம, தேவார, பிரபந்த பாடசாலைகள் ஏற்படுத்த வும் உபயோகிக்கவேண்டும் என்றும் இது குறித்து யோசனை கூற சங்கத்தின் பிரதிநிதிகளடங்கிய கமிட்டி ஒன்றை நியமிக்க வேண்டும் என்றும், இந்நிதிக்கு அறநிலயங்களிடமிருந்து நன் கொடையாக மட்டுமே பணவசூல் செய்யவேண்டும் என்றும் மகாநாடு கோரிற்று.

*14.* திருவிழாக்களை நடத்த இலாகா அதிகாரிகளை அனுப் பும் பழக்கத்தையும் உண்டியல்கள் ஏலங்கள் இலாகா அதிகாரி

கள் முன்தான் திறக்கவேண்டும் என்ற உத்தரவையும் மகாநாடு கண்டித்தது.

15. விதி விலக்கு அளிக்கும் 4 வது ஷரத்து மசோதாவில் இருப்பதை மகாநாடு எதிர்த்தது.

16. அறநிலையங்களின் தர்மகர்த்தர்கள் போர்டு கூட்டங்களைக்கூட்டுவதும், நிகழ்ச்சி முறையைத் தீர்மானிப்பதும், கூட்ட நிகழ்ச்சிகளைப் பதிவுசெய்வதும் கூட்டத்தலைவரின் பொறுப்பாக்க வேண்டும் என்றும், நிகழ்ச்சிப் பதிவின் பிரதிகள் தர்மகர்த்தர்களுக்கு வழங்கப்படல்வேண்டும் என்றும், நிகழ்ச்சி சம்பந்தமான Filo கள் தர்மகர்த்தர்களின் பார்வைக்கு முன்னதாக அனுப்பப் பெறல் வேண்டும் என்றும் மகாநாடு தீர்மானித்தது.

17. அறநிலையங்களுக்கு வக்கீல்களை நியமிப்பதில் தர்ம கர்த்தர்களுக்குப் பூர்ண உரிமையை மகாநாடுகோரி, தற்போதுள்ள வக்கீல் 'பானல்' முறையை எதிர்த்தது.

18. உள்துறை ஊழியர்களுக்குப் பயிற்சியும் பரீட்சையும் அத்தாட்சி பத்திரமும் வற்புறுத்தப் பெறல்வேண்டும் என்று மகாநாடு தீர்மானித்தது.

19. இலாகா அறிக்கைகளையும் உத்தரவுகளையும் சங்கத்துக்கும் அனுப்பவேண்டும் என்று சர்க்கார், கமிஷனர், துணை, உதவி கமிஷனர்களை மகாநாடு கேட்டுக்கொண்டது.

20. கணக்குத் தணிக்கை கட்டணத்தையும் நிலைய வருவாய்க்குத் தக்க வீதாசாரத்தில் ஒன்றரை சத விதத்தை அதிக பட்சமாக வைத்து நிர்ணயிக்கவேண்டும் என்றும், தணிக்கை செய்யப்பட்ட பசலிக்கு மட்டுமே தணிக்கை கட்டணம் வாங்க வேண்டும் என்றும் ஒருபசலி முடிந்தவுடன் தணிக்கையும் சீக்கிரத்தில் முடித்துவிடல் வேண்டும் என்றும் மகாநாடு யோசனை தெரிவித்தது.

21. நிலையங்கள் சமர்ப்பிக்கும் வரவு செலவுத் திட்டங்களைப் பிரதேச கமிட்டியும் இலாகாவும் குறைப்பதை மகாநாடு கண்டித்தது.

22. கட்டளைத் தர்மகர்த்தர்கள் அது சம்பந்தப்பட்ட அற நிலையங்களுக்கு தர்மகர்த்தர்களாக நியமிக்கப் படலாகாது என மகாநாடு தன் கருத்தைத் தெரிவித்தது.

23. ஆலயங்களுக்கு வரும் பிரமுகர்களை வரவேற்பதற்கான செலவுகளுக்குப் பட்ஜெட்டிலேயே ஒதுக்க வகை செய்ய வேண்டும் என்று மகாநாடு யோசனை தெரிவித்தது.

24. ஆலயச்சிப்பந்திகளுக்கு வேலையிலிருந்து ஓய்வுபெறுங் காலத்தில் "போனஸ்" அல்லது "கிராச்சுவடி" கொடுக்க மகாநாடு சிபார்சு செய்தது.

25. தர்மகர்த்தர்கள் போர்டில் காலியாகும் ஸ்தானங்களுக்கு வேறொருவரை நியமிக்கும்போது ஏற்கெனவே இருந்து வரும் தர்மகர்த்தர்களைக் கலந்தாலோசிக்க வேண்டும் என மகாநாடு கோரிற்று.

26. அறநிலையங்களின் திருப்பணி சம்பந்தமாகச் சர்க்கார் செய்துள்ள விதிகளை மகாநாடு கண்டித்து, சர்க்கார் நியமிக்கும் பொறியியல் வல்லுனர்களின் அனுமதிபெற்றுத் திருப்பணிசெய்வதால் வீண்கால தாமதம் ஏற்படும் என்றும், அறநிலையங்கள் தாங்கள் தகுதிபெற்ற பொறியியல் வல்லுனரின் மேற்பார்வையில் திருப்பணிகளைச்செய்ய வசதியிருக்கவேண்டும் என்றும், ரூ. 1000/- க்குக் குறைந்த வேலைகளுக்கு, இலாகாவின் முன் அனுமதிபெற வேண்டும் என இருக்கும் விதியிலிருந்து விலக்களிக்கவேண்டும் என்றும் மகாநாடு சர்க்காரைக் கேட்டுக் கொண்டு ஒரு தீர்மானம் நிறைவேற்றிற்று.

27. ஏலக்குத்தகை விடும் விஷயமாய் இலாகா ஊழியர்களின் தகவலின் பேரில், தர்மகர்த்தர்களுடைய ஆட்சேப சமாதானங்களைக் கோராமல் ரத்துசெய்யும் அதிகாரத்தை இலாகா கமிஷனர் வகிக்கக்கூடாதென்றும், அத்தகைய ரத்து அல்லது அங்கிகார உத்தரவை 15 நாட்களுக்குள் பிறப்பிக்க வேண்டும் என்றும், ஏலம் குறிப்பிட்ட இடத்தில்தான் நடத்தவேண்டும் எனவும் நேர் பேச்சுவார்த்தை மூலம் குத்தகை விடுவது கூடாதெனவும் தர்மகர்த்தர்களைக் கட்டுப்படுத்தலாகாதென்றும் மகாநாடு தீர்மானித்தது.

28. அறநிலையங்களின் சேவை அல்லது தர்மத்தை நடத்துவதற்கான இனும்களை சுவாதீனம் செய்துகொள்ளும் அதிகாரம் கலக்டரிடமிருந்து இலாகாவின் துணை கமிஷனருக்கு மாற்றப்படவேண்டும் என்று மகாநாடு ஒரு தீர்மானத்தில் கோரியது.

29. அறநிலைய நிர்வாகம் தர்மகர்த்தரிடம் ஒப்படைக்கப் பெற்றிருப்பதால் 101 வது ஷரத்தில் நிர்வாக அதிகாரி என்றிருப்பதை தர்மகர்த்தர் என்று திருத்தல் வேண்டும்.

30. அறநிலைய மசோதாவின் 106 வது ஷரத்து சேவார்த்தி கள் அல்லது அக்கறையுள்ளவர்களின் உரிமையைப் பாதிப்பதால் அதை நீக்கிவிடல் வேண்டும்.

31. அறநிலைய நிர்வாகத்துக்கான திட்டத்தை (Scheme) நிர்ணயிக்கும்போது இடைக்காலத்துக்கு இலாகா உத்யோகஸ்தர்களையோ சம்பள அதிகாரிகளையோ நியமிக்கலாகாதென்றும், அதற்குப் பதிலாக இடைக்கால தர்மகர்த்தர்களை நியமிக்கலாம் என்றும் மகாநாடு கோரியது.

32. இலாகா பிரசுரமான "திருக்கோயில்" தற்சமயம் தேவையைத் திருப்தி செய்வதாக இல்லை என்றும், இலாகா பிரசுரங்களைப் பதிப்பிக்க 'ஆசிரியர் குழு' ஒன்று நியமிக்கப் பெற வேண்டும் என்றும் அதில் சங்கத்தின் 2 பிரதிநிதிகளுக்கு இடமளிக்கவேண்டும் என்றும், எந்த நூலையும் பிரசுரிக்கும்படி எந்த அறநிலையத்தையும் இலாகா கேட்கக்கூடாதென்றும், ஆகமங்கள், பிரபந்தம், திருமுறை ஆகியவற்றின் திருத்தமான பதிப்பை இலாகாவே வெளியிட்டு விற்பனை செய்யலாம் என்றும், மகாநாடு கருத்துத் தெரிவித்தது.

33. அறநிலையச் சட்டத்தின்படி நியமிக்கப்பெறும் குழுக்களில் எல்லாம் சங்கத்தின் 2 பிரதிநிதிகளை நியமிக்கவேண்டும்.

34. இப்போதைய சட்டத்தின் 21 வது பிரிவு செல்லத்தக்கதல்ல என்று ஹைகோர்ட்டும் சுப்ரீம் கோர்ட்டும் முடிவு செய்திருக்க, அதையே வேறோர் உருவத்தில் மசோதாவின் 23 வது ஷரத்தாக சேர்ந்திருப்பதை மகாநாடு வருத்தத்துடன் கவனித்து, 23 வது ஷரத்தின் நோக்கம் ஈடேற 32 வது ஷரத்தே போதுமானதாகையால் 23 வது ஷரத்தை நீக்கவேண்டும் என்றும், 23 வது ஷரத்து அடிப்படை உரிமைகளுக்குப் புறம்பாகவும் தர்மகர்த்தர்களைப் பழிப்பதாகவும் தீமை நிறைந்ததாகவும் இருக்கிறதென்றும் பலமாகக் கண்டித்துத் தீர்மானித்தது.

35. அறநிலையங்களின் தர்மகர்த்தர்கள், அறநிலையங்களின் வருமானத்தைப் பெருக்கவும், நியாயமான வழிகளில் செலவுகளைக் குறைக்க முயலவும் வேண்டும் என்றும், சேவார்த்திகளுக்கு வசதிகள் செய்து தருவதிலும், ஸ்தலவரலாறு, சமயப் பிரசங்கங்கள், கூட்டுவழிபாடு போன்றவற்றிற்கு ஏற்பாடுகள் செய்து சமய பிரசாரத்துக்கு ஊக்கமளிக்கவேண்டும் என்றும், ஆலயச் சுற்றுப் புறங்களைத் துப்புரவாக வைத்திருக்கவேண்டும்

என்றும் அறநிலையங்களின் மராமத்து வேலைகளைக் காலாகாலத்தில் கவனித்துச் செய்யவேண்டும் என்றும், ஆலய நிலங்களை கூட்டுறவு விவசாயத்தின் கீழ் கொண்டு வரவேண்டும் என்றும் அறநிலையங்களின் தர்மகர்த்தர்களுக்கு மகாநாடு யோசனை கூறியது.

36. அறநிலைய மசோதாவின் பரிசீலனை குழுவிற்கு சென்னை ராஜ்ய அறநிலைய நிர்வாக அதிகாரிகள் சம்மேளனம் சமர்ப்பித்துள்ள யாதாஸ்தை மேலேகண்டுள்ள தீர்மானங்களுக்கு பாதகமோ, விரோதமோ இல்லாத அளவுக்கு மகாநாடு அங்கீகரித்து, அனுதாபத்துடன் அந்த யாதாஸ்தை கவனிக்கும்படி சர்க்காரைக் கேட்டுக்கொண்டது.

37. மகாநாட்டுத் தீர்மானங்களைச்சர்க்காருக்கும், மசோதா பரிசீலனைக் குழுவுக்கும் மற்றும் சம்பந்தப் பட்டவர்களுக்கும் அனுப்பவும் மசோதாவைக் குறித்து, சங்கத்தின் கருத்தடங்கிய யாதாஸ்தையும், ஷை தீர்மானங்களை யொட்டித் திருத்தங்களையும் சமர்ப்பிக்கவும், இலாகா அமைச்சரிடம், பரிசீலனைக் குழுவினிடமும் தூது செல்லவும் சங்கக் காரியதரிசிகளுக்கு அதிகாரம் அளிக்கும் தீர்மானத்தைக் கடைசியாக மகாநாடு நிறைவேற்றியது.

முற்றியது.




கேதார்நாத் அச்சகம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.